உ

சிவம்



முருகக் கடவுண்மீது

# செந்திலந்தாதி

## கலிநீங்குபத்து.

---

இஃது

"நற்குடி வேளாளர் வரலாறு" உரையாசிரியரும்
"வராசைக் கோமதியந்தாதி" நூலாசிரியருமாகிய
ஸ்ரீவைகுண்டந்தாலூகா சிவகளை
சைவத்திருவாளன்

S. N. அடைக்கலம்பிள்ளையாலியற்றப்பெற்று

ஷை யூர் சைவத்திருவாளர்
P. பிள்ளைவிநாயகம்பிள்ளையவர்களின்
வேண்டுகோளுக்கிணங்கி

நூலாசிரியரால்

ஸ்ரீவைகுண்டம்:
ஸ்ரீ கான வித்யா பிரஸில்,
பதிப்பிக்கப்பெற்றது.
1923

Registered] இதன்விலை [அணா 1.

உ

சிவம்

# செந்திலந்தாதி

## விநாயகர்வணக்கம்.

உமாபதி யீன்றருள் சேவற்கொடியுடையோன் புகழை
சாமானமில் செந்தமி ழந்தாதியாய்த் தமியேன் புகல
விமாசல னன்பொடுபெற்ற பொற்பாவைக் சினியமுதற்
குமார னற்றாண்டிவிநாயகன் றாடலைக் கொள்ளுதுமே

## நூல்

1 பூதலத்தோருந்தண் கற்பகச்சோலை பொலிவுறுவிண்
மாதலத்தோருமற் றேனையுலகினில் வாழ்குநரும்
வீதலற்றேஞ்செந்தின் மேயவ நின்கையின்வேல் தெரிசித்
தாதலுற்றே மெனிலென்றே பணிவர் நின்சந்நிதிக்கே

2 சந்நிதிவந்தென் குறைகளைச் சொல்லித் தமிடனேரு
அன்னியன்போ னிற்கலாமோ முருகநின்னன்ப னெனப
பன்னிபலையுமிப் பாவிசெயுமனந்தம்பவங்க
ளுன்னிமுனி யினடியேன் பொறேன் செந்தி லுத்தமனே

3 உத்தம வள்ளி தெய்வானை கணவ வுமைபுதல்வ
நததற்கரிய நமனையுதைத்திடு நம்பனருள்
வித்தக செந்திற்பதியினின் றன்பர்வினையகற்றும்
அத்தநின் றாள்பணிந்தேற்குமுண்டோ விவ்வருந்துயரே

4 துயரோடுழன்று திரியுமிப் புல்லனைத் தூயனென
வுயர்வோடருந்தமிழ் வல்லுநர்போற்று மொளிதாநீ
யயரேல்கருங்கட லோதையை பேதியதட்டொலியா
லுயரே ருழ வாவித்திடுஞ் செந்திற் குசநதவனே

கௗாற்றித் தாணிபின்மா
பக்குவமெற்கருள் பன்னிருகை
னங் காத்திடும் வள்ளிக்கருண்மிகத்தங்
தளி மயனரி போற்றுங் தயாநிதியே

கல்வியு ஞானமு நின்னடி நேர்ந்துதொழு
யாவுநின் சீரடியன்றியிம் மண்மிசையெக்
திலாவிக்கடையேற்புரை வர்க்கருளுஞ்செந்திற்
யமர்குறமான்பதியே யருள்பாலிப்பையே

லிக்கு மன்பர்க் கருண்மறைப் பண்ணவபக்திவிளேங்
ாலிக் கருங்கடல் சூழ்புவி மீதெனக்கார் நிகரே
ாலிப்பி யீன்றதண் முத்தனப்பேடடை வைத்துறங்கும்
ஆலிக்குஞ் சீரலைவாய் முருகா வுனடிதொழவே

தொழுதேனின்சீரடி கண்டென்றுயரைத் தொலைத்திடுவா
னழுதேனழுது மடியேற்கிரங்க வயர்ந்தனையே
பழுதேதிலாவடி யாருளரேனு மிப்பாவியையு
முழுதேமறத்தன் முறையோ திருச்செந்தின் முத்தையனே

9 முத்தமிழ்வாணர் பரவும்பெரும்புகழ் மூதறிஞ
வித்தகவேதனைக் குட்டிச்சிறையினில் வீழ்த்துசெந்தி
லத்தவறுமுக வாகந்தரூப வதிசயமெய்ப்
பத்தர்பாவும்பொற் பாத வினைதவிர்பண்ணவனே

10 பண்ணுருஞ் சொல்லியர் மோகத்திலாழ்ந்து பரிதவித்திங்
கெண்ணுது மெண்ணிப் புன்னுய்போ லலையுமிவ்வேழைமனம்
புண்ணுகச் செய்வதழகோ வருணைப் புலவர்க்கன்று
தண்ணு மருள்புரிங் தன்போடுகாத்ததனி முதலே

11 தனியான காட்டிற் றினைப்புனங்காத்திடுங் தையன்முன்சென்
றினியா கிலுமெற் கிரங்குநங்கா யென்றியப்பு செந்திற்
புனிதா மெய்ப்பாவலர் போற்றிடு முத்தழ்ப் பூரணனே
நனிநான் புகழுடனுய்வே னின்சீரடிநண்ணிடிலே

12 நண்ணாரை வேறொட்டு விண்ணாடவ
தண்ணார் பொழிற்செந்தி லார்முருகேச
பண்ணார் சொல்லாலிய லோடிசை நாடகப்ப
ருண்ணாறும் பாதகமல மென்சிந்தை யுறுமது

13 வேதா துழவணி மாலறியாத விபுதசெந்தி
லாதா குறமகணாதாவென் சிந்தை நலிவகற்றும்
போதா மெஞ்ஞானப்பரஞ்சுடரா நிற்கும் புண்ணியனே
யாதார மெற்குநின் வேலுமயிலு மடிகளுமே

14 அடியார்க்கெளியன் செஞ்சேவற் கொடியுடை யண்ணல்செழுங்
கடியார் கடப்பமலர்மாலையார் புயக்கந்தன்வெய்ய
விடியே றனையசொற் சூருரங்கீண்ட வெழிலயிலோ
னடியே பவக்கட னின்றெனைமீட்டு மருங்கலமே

15 கலனாருங் கொங்கையர் பங்கையவாண் முகங்கண்டு கண்டைம்
புலனாளும் வன்மையிலா மனத்தோடு புலருமிந்தப்
பலனே திலான்செயும் பாமாலையேனு நின்பாதமுற
வலைமோது சீரலைவாய்க்குகனே யணிந்தாட் கொள்வையே

16 கொள்ளே னல்லோர்சொலு மம்மாறுக்குங் குறிப்புரைகள்
விள்ளேன் சிவாகமசாத்திர மாமறை வெய்யவென
வெள்ளே னறுகுற்ற மைம்புலன்யார்க்கு மிரங்குமருட்
கள்ளேயுந் தண்கடப் பந்தார யாரெனைக்காப்பவரே

17 காத்தவராருனை மாயமலை நின்றுகற்றவரைக்
காத்தவராருனை சூர்மகனாற் கடலாழ்ந்தவரைக்
காத்தவராருனை கண்ணாறுங் கற்பகக்காவலரைக்
காத்தெனையாள்வ தெவருனை செந்திற்கலாநிதியே

தீங்கறுகற்பகமே
ருளோடடு தண்ணித்திலஞ்சேர்
யமர் கந்தகலாபமிசை
தார விரைந்தெனை யோம்புவையே

வேறெட்டு வெய்யாவுததியை வற்றிடச்செய்
வுயர் சங்கத்தோ ரையந்தீர்ந்து தணிவுறுவான்
யார் மழுவுடையான் கூடன்மேவிய கற்பகவே
ய்யா விவ்வேழை துயர்தவிர்செந்திலறுமுகனே

அறுமுகனே தெய்வயானை குறக்கொடியன்பனென
வுறுமுருகேச வடியார் பவத்தொடக்குற்ற வெலா
மறுமெனும் வன்மை மனத்தினராயன்பு பூண்டுவசம்
பெறுதிருச் செந்திற் குகவெனைக் காத்தருட் பேறளியே

21 அளியாருந் தண்கடப்பந்தார் புனையுமணிபுயமு
மொளியாருஞ் செஞ்சுடர் வேலுமெய்யாச லடைபயிலுங்
களியாரு மஞ்ஞையுந் தணணளிகாட் டஞ்சலிக்காமு
மெளியேன் கண்டானந்திக்கச் செயும் பேருளென் சொல்வனே

22 சொல்லினுஞ் சொல்லின் முடிவினும் வேதத்துணி பினுங்கா
ரல்லினுஞ் சோதியதனினு மாகமமா முதலாம்
வல்லவர் செய்பல நூலினு மாமயிலின் முதுகோ
டல்பகலென்றன் மனத்தினு நிற்பணறு முகனே

23 முகமாறு வேன்மயில் சேவற்காந்து முடிவரிய
சகமாயை நீக்கக் கவுணியா யித்தாணிமிசை
யகமாயை போக்கானர் காழியில் வந்தவதரித்தோ
யிகன்மாயை தீர்த்தெனைக் காத்தருள் செந்திற் கினியவனே

24 இனியவனே யன்பர்கசென்று மிகபரம்
முனிவனே மரைச்சேவடி சிந்தையின்மு
பனிமலர்ச் சோலையின் றண்ணிழல் காரென்ப
ன்னிடடஞ் செய்செந்திற் சேவகநின்பத நற்றுணை

25 நற்றுணையாவது செந்திற் பதிவளர் நாயகன்றன்
பொற்றுணைச் சீரடியல்லாது வேறிப்புவியிலுண்டோ
கற்றுணையாக் கருந்தண்கடல் வீழ்த்தியுங்கற்றவான்
றூற்றகல்லே கலமாக்கரை பெற்றிதிவ்வுண்மையதே

26 உண்மையதே யெனைக்காத்தருளொண்பொருணீயென்பதும்
வண்மையதே யுன்னடி யாரைப் போற்றிவளங்குவதுந்
திண்மையதே நின்பொற் சீரடிதான் மறவாததிற
னுண்மையதே கந்தவுன்னருள் பெற்றிங்குயர்வதுமே

18C845

27 உயர்வதுந்தாழ்வது மிவ்வுலகத்தியற்கைக்குறிப
வயர்வுடனின்னடி போற்றாத தாழ்வருளற்றசெல்வத்
துயர்வெனக்கீயலிவ் வேழைக்குன்சீரருளா லுயர்வும்
பெயருந்தருஞ்செல்வந் தந்தாளெஞ் செந்திற்பிரணவனே

28 பிரணவனேயடி யேன்றுயர் தீர்க்கப்பிறங்கிருசெஞ்
சரணவனே மதியாத வெஞ்சூர்முதற்றுனவரைத்
திரணமென்றே செங்கைவேலெட்டுச் செற்றசெழுஞ்சுடரே
யாரணனக்குன்றன் றிருக்கடைக்கண்ணின்றருளொளியே

29 ஒளியேயென்னுள்ளத் துயர்சந்தனசலத்தோங்கறுகா
லளியேயுஞ்செச்சை மலர்மாலை சூடறுமாமுகனே
கிளியேயெனவந்த சந்தப்புலவர்க்கிரங்கு செந்தின்
வளியேசுடவுபொற் றேருடையா யெனைவாழ்விப்பையே

முருகன்றன் சீரடிவாழ்த்துவரைத்

லென்று மலர்க்கிலை தண்ணளிசேர்

யசோன் மான்மகள் கேள்வனடியிணையைப்

திற் குறித்தனனே வன்றே வுய்ந்தனன் பூதலத்தே

வேறு (வாழ்த்து)

31 வாழக செந்தின்மா முருகனன் னவன்வடி வேலும்

வாழ்க மஞ்ஞையுஞ் சேவலும் வண்சந்தக் கிளியும்

வாழ்க வான்குற மானுடன் வாரணக் கொடியும்

வாழ்க செந்திலந் தாதியை வழுத்துசொல்வல்லோர்

நூற்பயன்

செந்தின் மாநகர் வாழ் முருகனருள் செப்பும்

அந்த மிக்கவந் தாதியை யச்சினிற் பதித்தோர்

சிந்தை கூர்ந்ததைப் படித்தவர் கேட்டவர் சிறந்து

கந்த வேடிரு மலரடி கலந்துவீற் றிருப்பார்

முற்றிற்று

உ
சிவம்

# கலிநீங்குபத்து

1 சீராருஞ் செந்தில் வளர் சேவகனே சோலராங்
காரா ரவுணர்தமைக் காய்ந்தோனே—பாராரும்
பத்தர் வினை யகற்றும் பண்ணவனே பன்னிருகைச்
சித்தனே யென்கலியைத் தீர்

2 தீரா வினையகற்றுஞ் சேவற் கொடிபடைத்த
காரார் குழல்வள்ளி காத லனே—ஓராது
எண்ணிறந்த கோடிவினை யேழைசெயி னுமறந்து
தண்ணளியோ டென்கலியைத் தாக்கு

3 விண்ணாடர் போற்ற விரைந்தருள்செய் வேலவனே
பண்ணாருஞ் செந்தமிழ்ப்பா மாலையொடு—தண்ணாருந்
தேன்கடப்ப மாலையணி தேவேயென் சீரழிக்கும்
வான்கலியை நீயகற்று வாய்

4 வானா நிலனா வளியா வெரிபுனலாக்
கோனாகி நின்ற குரு பரனே—நானோர்பால்
வெய்யகலி யாலிளைத்து மேனிதளர்ந் தேன்றுயரைத்
துய்யனே நீதொலைப் பாய்

5 இன்னா செயினுமென்னை யின்னருளா லேநோக்கிக்
கொன்னாருந் தீக்கலி யைக் கொன்றுமேந—ன்னயமாய்ச்
செய்யா ளுடன்செந்திற் சேவகனே நின்னருளை
ஐயா வெனக்கருளா வாய்

6 தோலா வசுரர் தொலையத் திருக்கையார்
வேலா லெறிந்த விற லோனே—மாலாரும்
வெய்யகலி யையகற்றி வேதனைதீர்த் தின்பமுற
ஐயனேநீயருளா வாய்

கிரங்கி வெற்றிவடி வேலெடுத்து
ற்ற வுய ருத்தமனே—மண் ணுலகிற்
செந்தில் வாழ் புண்ணியனே யென்கலிதீர்
யுன்ற னருள்

வேண்டுஞ் சைவனுக்கோர் பொற்கிழியொன்
றேகொடுத்தார்)
நின்வேண்ட வென்கலியை நீக்கா யேல்—அன்னவர்க்கு
நீபுதல்வ னல்லையோ நின்கழலே போற்றுமெற்குச்
சீர்முதல்வ னல்லனோ செப்பு

9 ஓங்காரத்தே நின் றுயர்சச்சி தாநந்த
பாங்கான செந்திற் பழம் பொருளே—ஆங்காரத்
தாலெய் கலிநீக்கிச் சற்குரு வே யுன்றனரு
ளாலெய் பயனீகுவாய்

10 கந்தா முருகா கடம்பா கலாபமிசை
வந்தா ளெனைத் தொடரும் வான்கலிதீர்த்—தெந்தாய்
மண்ணுலகி னின்கழல்சீர் வாழ்த் தடியா ரிலெனையு
மெண்ணு மொருவனிவ னென்று

முற்றிற்று.

முருகன்றுணை.